29th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் அங்கே அறிவிக்கவில்லை. இதுமாதிரி என்ஜினீரிங் காலேஜ் ஆரம்பிப்பது என்பது ரொம்ப கஷ்டமான காரியம். ஆகவே, முதலிலே பாலிடெக்னிக் ஆரம்பிக்க முயற்சி செய்யுங்கள், அதற்குப் பின்னால் வேண்டுமானால் என்ஜினீரிங் காலேஜ் வைப்பதுபற்றி யோசனை செய்துகொள்ளலாம் என்றுதான் நான் சொன்னேனே தவிர, என்ஜினீரிங் காலேஜ் வைப்பதாக நான் சொல்லவில்லை. அதுவும் அங்கே தேர்தல் பிரசாரத்திற்காகப் பேசிய கூட்டத்தில் அல்ல. மாணவர்களுடைய கூட்டத்திலே—வோட்டு இல்லாதவர்கள் கூட்டத்திலே பேசியது.

SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM : திருநெல்வேலி ஜில்லாவில் தாளயூத்தில் இந்தியா சிமெண்ட் கம்பெனியார் பாலிடெக்னிக் ஒன்று நடத்துகிறார்கள். கனம் முதலமைச்சர் அவர்கள் அங்கு வந்திருந்தபோது, என்ஜினீரிங் காலேஜ் ஒன்று வைக்கவேண்டுமென்று அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். அது விஷயமாகக் கவனிக்கப்படும் என்று முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அது விஷயமாக இப்பொழுது விண்ணப்பித்துக் கொண்டால் கவனிப்பாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது தக்க சமயத்தில் கவனிக்கப்படும்.

*Backward and Most Backward Classes*

* 609 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri M. Jangal Reddiar) : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government are considering any proposal to include certain " Forward Communities " in the list of Backward Classes and to include certain " Backward Communities " in the list of Most Backward Classes; and

(*b*) if so, what are the Communities and their proposed classification?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) The question does not arise.

SRI T. S. RAMASWAMY PILLAI : பாக்வார்டு, மோஸ்ட் பாக்வார்டு என்று சில சமூகங்களைக் குறிப்பிட்டிருந்தாலும், மிகவும் பிற்பட்ட சமூகங்களைச் சேர்ந்தவர்கள் உண்மையிலேயே அத்தகைய சர்ட்டிபிகேட் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள். குறிப்பாக, " சாணார் " " நாடார் " போன்ற சமூகத்தினர் இத்தகைய சர்ட்டிபிகேட் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI P. KAKKAN : எனக்கு அந்தத் தகவல் வரவில்லை.

SRI N. R. THIAGARAJAN : பின்தங்கிய, மிகப் பின்தங்கிய, மிக மிகப் பின்தங்கிய என்று இப்படியாகப் பின்னால் போய்க்கொண்டிருக்கிறோம். இவற்றை மாற்றி, ஏழை, பணக்காரன் என்ற இரு ஜாதிமட்டும் உண்டுபண்ணப்போவதாக டில்லியில் பேச்சுவார்த்தை நடந்ததா ? அப்படியானால், அது எப்பொழுது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI P. KAKKAN : பரிசீலனை செய்து பின்னால்தான் தெரிவிக்கவேண்டும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : பிற்பட்ட வகுப்பினர் பட்டியலில் இப்பொழுது இருக்கும் செங்குந்தர், தேவாங்கர், சௌராஷ்டிரர், வன்னியர் இதுபோன்ற சமூகங்கள் மிகவும் பிற்பட்டுப் பின்தங்கிய நிலையில்

[29th September 1958

இருக்கின்றன. பொருளாதாரத் துறையிலும், கல்வித் துறையிலும் அவர்கள் பின்தங்கிய நிலையில் இருப்பதால் அந்தச் சமூகங்களையாகிலும் அதிக பிற்பட்ட சமூகத்தவர் பட்டியலில் சேர்க்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இல்லை.

*Drainage schemes*

* 610 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the work relating to Kandaparicharnur Drainage Scheme in Mannargudi taluk, Tanjore district, has been commenced;

(*b*) when it will be completed; and

(*c*) what is the total amount to be spent on the scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir. The work will be started immediately after the present irrigation season is over.

(*b*) It will be completed in two seasons, i.e., by July 1960.

(*c*) Rs. 4,81,000 (for works).

SRI A. VEDARATHNAM : இந்த வடிகால் ஜலத்தை கடை முனையிலே (டெயில் எண்ட்) பாசனத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்கின்ற உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ? இல்லையானால், அதைப்பற்றிப் பரிசீலிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வடிகால் வசதி செய்து கொடுக்கப்பட்டு, 472 சில்லரை எக்கர் நிலத்திற்கு இரண்டாவது போகம் சாகுபடிக்கும் ஏற்பாடு செய்யப்படுகிறது.

*Publication of Cheap Editions of Tamil books*

MR. SPEAKER : The Hon. Member is not in his seat. The question and answer will be printed in the proceedings.

* 611 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have any proposal to undertake publication of cheap editions of books of literary interest in Tamil language; and

(*b*) if so, the books selected for publication?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Dam across Palar-Porandalar*

* 612 *Q.*—SRI N. R. THIAGARAJAN (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to take up and execute the scheme for the construction of a Dam across Palar-Parandalar river rising from Kodaikkanal in Palni taluk, Madurai district, during the Second Five-Fear Plan?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.